7884



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

හින්දු ශිෂ්ටාචාරය II
இந்து நாகரிகம் II
Hindu Civilization II

46 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

* பகுதி **I** இலிருந்து எவையேனும் **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I

**1.** வேதகால இந்து நாகரிகத்தின் சிறப்பினை மேல்வரும் தலைப்புக்களில் விளக்குக.

(அ) வேதங்களின் அமைப்பு

(ஆ) இருக்கு வேதம் சுட்டும் பிரதான தேவர்கள்

(இ) சமய வழிபாடு

(ஈ) வேதகால சமூகம் ($5 \times 4 = 20$ புள்ளிகள்)

**2.** (அ) சோழர் காலத்தில் கோயிற் கட்டடக்கலை வளர்ச்சிக்குப் பங்களித்த சோழ மன்னர்கள் **மூவரைப்** பெயரிடுக. (3 புள்ளிகள்)

(ஆ) சோழர் காலத்தில் கோயிற் கட்டடக்கலை வளர்ச்சி பெற்றவாற்றை மேல்வரும் தலைப்புக்களில் விளக்குக.

(i) முற்காலச் சோழர் கோயில்கள் (5 புள்ளிகள்)

(ii) இடைக்காலச் சோழர் கோயில்கள் (6 புள்ளிகள்)

(iii) பிற்காலச் சோழர் கோயில்கள் (6 புள்ளிகள்)

**3.** "இந்து சமய சமூக மறுமலர்ச்சியில் இராமகிருஷ்ண மடத்தின் பங்கும் பணியும் தனித்துவமிக்கவை". இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை மேல்வரும் விடயங்களைக் கருத்திற் கொண்டு விவரிக்குக.

(அ) ஸ்ரீ இராமகிருஷ்ணரின் போதனைகள்

(ஆ) சுவாமி விவேகானந்தரும் இராமகிருஷ்ண மடமும்

(இ) மடத்தின் சமயப்பணி

(ஈ) மடத்தின் சமூகப்பணி ($5 \times 4 = 20$ புள்ளிகள்)

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

**4.** சங்கரரின் அத்வைத வேதாந்தத்தின் பிரதான அம்சங்கள் மற்றும் ஆன்மீக விடுதலைக்குரிய வழிமுறைகள் பற்றி விவரிக்குக. (20 புள்ளிகள்)

**5.** சைவசித்தாந்த நோக்கில் பதியின் இருப்பு, பதியின் இயல்புகள் பற்றிய சிந்தனைகளை விவரிக்குக. (20 புள்ளிகள்)

**6.** இலங்கையில் திருக்கேதீச்சரத் திருத்தலத்தின் மூர்த்தி, தல, தீர்த்தச் சிறப்புக்களை விளக்குக. (20 புள்ளிகள்)

**7.** மக்களது நிறைவான வாழ்க்கைக்குத் திருக்குறள் கூறும் நல்லுபதேசங்களை விவரிக்குக. (20 புள்ளிகள்)

**8.** சிவனது நடராஜ வடிவத்தின் சிறப்பினை அதன் தோற்றப்பொலிவு, விளக்கி நிற்கும் தத்துவங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் விளக்குக. (20 புள்ளிகள்)

* * *

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

| | | |
|---|---|---|
| හින්දු ශිෂ්ටාචාරය I<br>இந்து நாகரிகம் I<br>Hindu Civilization I | 46 T I | පැය දෙකයි<br>இரண்டு மணித்தியாலம்<br>Two hours |

**அறிவுறுத்தல்கள் :**

- ✳ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ✳ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- ✳ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ✳ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி (×)** இடுவதன் மூலம் காட்டுக.

**1.** வேதங்கள் காதால் கேட்கப்பட்டு வாயால் ஓதப்பட்டு வந்தமையால் அவை பெறும் பெயர்
(1) அபௌருஷேயம் (2) எழுதாமறை (3) சுயம்பு
(4) சுருதி (5) பரவித்யா

**2.** இருக்கு வேதத்தில் படைப்புக்குரிய தெய்வம் எனப் போற்றப்படுபவன்
(1) உருத்திரன் (2) பிரஜாபதி (3) பர்ஜன்யன்
(4) பூஷன் (5) சோமன்

**3.** 'ஒழுங்கின் காவலன்' எனச் சிறப்பிக்கப்படும் தெய்வம்
(1) வருணன் (2) அக்கினி (3) இந்திரன்
(4) யமன் (5) மித்திரன்

**4.** "எள்ளில் எண்ணெய் உள்ளடங்கியிருப்பது போன்று பிரமதத்துவம் மறைந்துள்ளது" எனக் குறிப்பிடும் உபநிடதம்
(1) பிருகதாரண்யம் (2) சாந்தோக்கியம்
(3) கடோபநிடதம் (4) சுவேதாஸ்வதர உபநிடதம்
(5) கேன உபநிடதம்

**5.** வைணவ ஆகமத்தின்படி விக்கிரக வடிவம் என்பதைக் குறிக்கும் பெயர்
(1) பரம் (2) விபவம் (3) வியூகம்
(4) அந்தர்யாமித்துவம் (5) அர்ச்சா

**6.** தெய்வங்களுக்குப் பல பெயர்களைக் கூறி வழிபடும் முறையை முதன்முதல் குறிப்பிடும் வேதம்
(1) இருக்கு வேதம் (2) யசுர் வேதம் (3) பிரம வேதம்
(4) அதர்வ வேதம் (5) சாம வேதம்

**7.** வறுமையில் வாடிய மூதாட்டிக்கு கனகதாரா ஸ்தோத்திரம் பாடித் தங்க நெல்லிக்கனியைப் பெற்றுக் கொடுத்தவர்
(1) இராமானுஜர் (2) நிம்பார்க்கர் (3) ஆதிசங்கரர்
(4) மத்துவர் (5) ஞானதேவர்

[பக். 2 ஐப் பார்க்க

8. குடுமியாமலைக் கல்வெட்டில் இடம்பெற்றுள்ள சிவதோத்திரத்தின் மூலம் தனது ஆழ்ந்த சிவபக்தியை வெளிப்படுத்திய பல்லவ மன்னன்
(1) இரண்டாம் நரசிம்மவர்மன் (2) மாமல்லன் (3) பரமேசுவர வர்மன்
(4) மகேந்திர வர்மன் (5) நந்தி வர்மன்

9. "இறைவன் ஒருவரே உண்மை; எல்லோரும் வாருங்கள்" என்ற சமய ஒருமைப்பாட்டை எடுத்துக்கூறிய நவீன கால இந்துமத சீர்திருத்தவாதி
(1) ராஜாராம் மோகன்ராய் (2) தயானந்த சரஸ்வதி
(3) சுவாமி விவேகானந்தர் (4) ஸ்ரீ இராமகிருஷ்ணர்
(5) அன்னி பெசன்ற் அம்மையார்

10. சைவசித்தாந்த சாத்திர நூல்களிற் காணப்படும் கருத்துக்களைத் திரட்டியும் விளக்கியும் வழிநூல் எழுதிய ஈழத்து சைவசமய அறிஞர்களுள் முதன்மையானவராக விளங்கியவர்
(1) அருணாசல தேசிகர் (2) காசிவாசி செந்திநாதையர்
(3) பண்டிதர் ஏழாலை மு. கந்தையா (4) பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை
(5) சிவபாதசுந்தரனார்

11. பிரமசூத்திரத்திற்கு விசிட்டாத்துவைத கண்ணோட்டத்தில் எழுதப்பட்ட விளக்கவுரை
(1) வேதாந்த சாரம் (2) வேதாந்த தீபம் (3) ஸ்ரீ பாஷ்யம்
(4) வேதாந்த சங்கிரகம் (5) நித்திய கிரந்தம்

12. 'மகவான்' என வர்ணிக்கப்படும் தெய்வம்
(1) உருத்திரன் (2) இந்திரன் (3) பிருகஸ்பதி
(4) வருணன் (5) அக்கினி

13. திருக்கேதீச்சர சிவாலயத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது தேவாரம் பாடியவர்
(1) காரைக்காலம்மையார் (2) அப்பர் (3) சுந்தரர்
(4) மணிவாசகர் (5) சேக்கிழார்

14. 'கேவலாத்துவைதம்' என்னும் தத்துவக் கோட்பாட்டைத் தோற்றுவித்த தத்துவஞானி
(1) மத்துவர் (2) இராமானுஜர் (3) சுவாமி விவேகானந்தர்
(4) ஆதிசங்கரர் (5) நிம்பார்க்கர்

15. மங்களாசனம் பெற்ற திவ்விய தேசங்களின் உருவாக்கத்துக்குக் காரணமானவர்கள்
(1) ஆழ்வார்கள் (2) ஆசாரியர்கள் (3) சங்கமர்கள்
(4) நாயன்மார்கள் (5) பௌத்தர்கள்

16. கன்னடத்தில் சமுதாய சமத்துவத்தை நிலைநாட்டுவதற்காக ஹரிதாசர்களை உருவாக்கிய பெருமைக்குரியவர்
(1) மத்துவர் (2) சங்கரர் (3) கௌடபாதர்
(4) ஸ்ரீ இராமகிருஷ்ணர் (5) பாதராயணர்

17. பின்வருவோருள் ஸ்ரீரங்கத்து மடாதிபதிகளுள் ஒருவராகத் திகழ்ந்தவர்,
(1) பத்மபாதர் (2) ஆளவந்தார் (3) தோடகர்
(4) ஆனந்த தீர்த்தர் (5) கௌடபாதர்

18. சைவ சித்தாந்த மரபில் "விடிவாமளவும் விளக்கனைய மாயை வடிவாதி கன்மத்து வந்து" எனக் குறிப்பிடும் நூல்
(1) சிவஞானசித்தியார் (2) கொடிக்கவி (3) திருவருட்பயன்
(4) வினாவெண்பா (5) நெஞ்சுவிடு தூது



[பக். 3 ஐப் பார்க்க

**19.** "இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்" எனக் கூறிய ஈழத்துச் சைவசமய நல்லறிஞர்
(1) காசிவாசி செந்திநாதையர் (2) நல்லைநகர் நாவலர் (3) அருணாசல தேசிகர்
(4) சுவாமி விபுலானந்தர் (5) சுவாமி ஞானப்பிரகாசர்

**20.** அறுபத்துமூன்று நாயன்மார்களின் வாழ்வியல் வரலாறுகளின் மூலம் வல்வினை, மெல்வினை என்பவற்றின் தாற்பரியத்தை விளக்கி நிற்பது
(1) திருக்களிற்றுப்படியார் (2) சிவஞானசித்தியார் (3) சிவஞானபோதம்
(4) சங்கற்பநிராகரணம் (5) திருவுந்தியார்

**21.** சைவசித்தாந்தம் கூறும் 'சதசத்து' என்ற பதம் குறித்து நிற்பது
(1) பதி (2) ஆன்மா (3) ஆணவம்
(4) கன்மம் (5) மாயை

**22.** ஆலயங்களில் கதாப்பிரசங்கம் நிகழ்த்தப்படுவதன் முக்கிய நோக்கமாவது
(1) பக்தர்கள் பொழுதைக் கழிப்பதற்காக
(2) சமயக் கருத்துக்களை சாதாரண மக்களுக்கு விளக்குவதற்காக
(3) மக்களை வேறுபாடின்றி ஒன்றுகூட்டுவதற்காக
(4) கதாப்பிரசங்கம் செய்பவர் தனது திறமையை வெளிப்படுத்துவதற்காக
(5) இளைய தலைமுறையினரிடையே ஆலய வழிபாடு தொடர்பான ஈடுபாட்டை ஏற்படுத்துவதற்காக



**23.** சைவசித்தாந்த சிந்தனைகளைப் பெரிதும் கொண்டு விளங்கும் சிவாகமங்களுள் இரண்டினைக் கொண்ட தொகுதி
(1) காமிகம், காரணம் (2) மகுடம், சிந்தியம்
(3) கிரணாகமம், ரௌரவாகமம் (4) தீப்தம், சூக்குமம்
(5) விமலம், பிம்பம்

**24.** இந்து விக்கிரகக் கலைமரபில் வார்ப்பு விக்கிரகங்கள் சிறப்பாக உருவாகிய காலமெனப் போற்றப்படுவது
(1) பாண்டியர் காலம் (2) சோழர் காலம் (3) சங்ககாலம்
(4) பல்லவர் காலம் (5) விஜயநகர காலம்

**25.** ஆன்மீக விடுதலைக்கு பகவத்கீதை காட்டி நிற்கும் வழிமுறை
(1) இல்லற தர்மம் (2) பிரம்மச்சரிய வாழ்வு
(3) சரணாகதி (4) குருவழிபாடு
(5) பிதிரர் வழிபாடு

**26.** திருக்கோணேச்சர சிவாலயத்தின் தீர்த்தத்தின் பெயர்
(1) பாவநாசம் (2) பாலாவி (3) கோயிற் திருக்கேணி
(4) மாயவன் ஆறு (5) மாணிக்க கங்கை

**27.** தென்கிழக்காசியாவில் தைப்பூசத் தினம் சிறப்பாகக் கொண்டாடப்படும் ஆலயம்
(1) கோர்ட்டுமலை கந்தசாமி ஆலயம் (2) பத்துமலை முருகன் ஆலயம்
(3) ஸ்ரீ சுந்தரேஸ்வரர் ஆலயம் (4) பத்திரேஸ்வரர் ஆலயம்
(5) பிரம்பனார் ஆலயம்

**28.** காஞ்சிக் கைலாசநாதர் ஆலயத்துடன் சிறப்பாகத் தொடர்புடைய பெயர்
(1) ஜலசயனம் (2) தென்திசைமேரு
(3) பெரியதிருக்கற்றளி (4) விண்ணகரம்
(5) பிருஹதீச்சரம்

**29.** தமிழகத்துச் சைவமரபில் இறைவனை "பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையும்" எனப் பாடி இசையினைப் போற்றியவர்
(1) சம்பந்தர் (2) அப்பர் (3) காரைக்காலம்மையார்
(4) சுந்தரர் (5) மாணிக்கவாசகர்

[பக். 4 ஐப் பார்க்க

7884

**30.** இதிகாசங்கள் இறுதி வடிவத்தைப் பெற்ற காலம்
(1) குஷானர் காலம் (2) மௌரியர் காலம் (3) குப்தர் காலம்
(4) சோழர் காலம் (5) சாளுக்கியர் காலம்

**31.** 'வடமொழியில் இராமாயணத்தை எழுதிய ஆதிகவி' என்ற பெருமைக்குரியவர்
(1) வியாஸர் (2) வான்மீகி (3) நாரதர்
(4) கௌடபாதர் (5) காளிதாசர்

**32.** "எழுமின், விழிமின்" என்று இளைஞர்களை சமூகப் பணிக்காக அறைகூவல் விடுத்தவர்
(1) ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் (2) தயானந்த சரஸ்வதி (3) ரமணர்
(4) இராஜாராம் மோகன்ராய் (5) சுவாமி விவேகானந்தர்

**33.** சிவாகமம் உள்ளடக்கியுள்ள கிரியாபாதத்தில் 'கர்ஷணம்' என்ற பிரிவு குறிப்பது
(1) நித்திய பூசை
(2) ஆலயங்களை நிர்மாணிக்கும் முறை
(3) ஆலயம் அமைப்பதற்குரிய இடத்தைப் பண்படுத்துதல்
(4) ஆலயத்தை வழிபடும் முறை
(5) ஆலயத்தில் நிகழும் மகோற்சவம்

**34.** தமிழகக் கோயில்களில் 'ஆகாயத்தின்' அம்சமாகப் போற்றி வழிபடப்படும் திருத்தலமாக விளங்குவது
(1) திருக்காளத்தி (2) சிதம்பரம் (3) திருக்கடவூர்
(4) திருவண்ணாமலை (5) திருவானைக்கா

**35.** "அஹிம்சையே மேலான தர்மம்" எனப் போற்றும் நூல்
(1) அதர்வ வேதம் (2) பிரமசூத்திரம் (3) மகாபாரதம்
(4) சுக்கிர நீதி (5) கடோபநிடதம்

**36.** சைவசித்தாந்த சாத்திரங்களில் 'சித்தாந்த அட்டகம்' எனச் சிறப்பிக்கப்படும் எட்டு நூல்களை இயற்றிய சிறப்பிற்கு உரியவர்
(1) மெய்கண்டார் (2) அருணந்தி சிவாச்சாரியார் (3) மனவாசகங்கடந்த தேவர்
(4) உய்யவந்த தேவர் (5) உமாபதி சிவாச்சாரியார்

**37.** சிவாகமங்கள் கூறும் கிரியைகளை வழிப்படுத்துபவை
(1) பிராமணங்கள் (2) வேதாங்கங்கள் (3) பத்ததிகள்
(4) புராணங்கள் (5) திருமுறைகள்

**38.** சைவசமய மரபில் சரியைத் தொண்டு புரிந்த நாயனார்
(1) நாவுக்கரசர் (2) இளையான்குடிமாறநாயனார் (3) கண்ணப்பர்
(4) அப்பூதியடிகள் (5) சம்பந்தர்

**39.** "தேவாரம் வேதசாரம்" என்று குறிப்பிட்ட ஈழத்துச் சைவ சித்தாந்த அறிஞர்
(1) ஆறுமுகநாவலர் (2) காசிவாசி செந்திநாதையர் (3) சுவாமி ஞானப்பிரகாசர்
(4) சிவபாதசுந்தரனார் (5) அருணாசல தேசிகர்

**40.** திருமாலின் அனந்தசயன வடிவம் சிறப்பாக உணர்த்தும் தெய்வீக வரலாறு
(1) அவதார நிலை
(2) விக்கிரகமாக விளங்கும் நிலை
(3) திருமால் திருப்பாற் கடலில் ஆதிசேஷன் என்ற நாகத்தின் மீது பள்ளி கொண்டுள்ள நிலை
(4) நாகத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் நிலை
(5) கலையழகை வெளிப்படுத்தும் நிலை

[பக். 5 ஐப் பார்க்க

● **41** தொடக்கம் **45** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள கூற்றுகளை வாசித்து, அவற்றுக்குப் பொருத்தமானவற்றை பின்வரும் அட்டவணையின் **I, II, III, IV** ஆகிய நிரல்களிலிருந்து தெரிவுசெய்க.

| I | II | III | IV |
|---|---|---|---|
| A<br>சைவசமய மீட்டுருவாக்கம் | F<br>ஆத்மீக சபை ஸ்தாபித்தல் | K<br>பதிகம் பாடல் | P<br>வேதாந்த மீட்டுருவாக்கம் |
| B<br>கோயில்களில் இதிகாசக் காட்சிச் சிற்பங்கள் | G<br>விருபாட்சகர் வழிபாடு | L<br>வைணவ மதத்தை நிலைபெறச் செய்தமை | Q<br>பஞ்சாட்சர மந்திரத்தைப் போற்றுதல் |
| C<br>இந்தியாவின் புதுயுகத் தந்தை | H<br>இறைவனை அன்பு வழியில் வழிபடல் | M<br>தேவராஜ வழிபாடு | R<br>பெண்ணுரிமையைப் பாதுகாத்தல் |
| D<br>கத்தியத்திரயம் | I<br>ஜெயவர்மன் | N<br>சமூக சமத்துவம் | S<br>காளத்தி மகாத்மியம் |
| E<br>வித்யாரண்யர் | J<br>நம்மாழ்வார் பாடல்களை மக்களிடையே பரப்பியமை | O<br>பசவபுராணம் | T<br>வடமொழி சிறப்புப் பெற்றது |

**41.** தமிழகத்தில் சைவபக்தி இயக்கத்தினருடன் தொடர்புடைய தொகுதி
(1) A, H, K, Q (2) B, F, K, Q (3) B, G, M, T (4) C, E, N, S (5) D, G, N, Q

**42.** நவீன இந்து சமய சீர்திருத்தவாதி ராஜாராம் மோகன்ராய் அவர்களுடன் தொடர்புடைய தொகுதி
(1) A, G, M, T (2) B, G, M, S (3) C, F, N, R (4) D, H, N, S (5) E, F, O, P

**43.** விஜயநகர கால இந்து சமய மறுமலர்ச்சியோடு தொடர்புடைய தொகுதி
(1) A, F, M, T (2) B, G, K, S (3) C, I, N, T (4) E, G, O, S (5) E, H, O, T

**44.** கம்போடியாவில் பரவிய இந்துப் பண்பாட்டுடன் தொடர்புடைய தொகுதி
(1) A, J, O, R (2) B, I, M, T (3) C, F, M, T (4) D, H, M, S (5) E, H, L, R

**45.** இராமானுஜரது சமயப்பணியோடு தொடர்புடைய தொகுதி
(1) A, G, K, P (2) C, P, M, T (3) D, G, N, T (4) D, J, L, P (5) E, J, K, Q



[பக். 6 ஐப் பார்க்க

● **46** தொடக்கம் **50** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**46. புராதன இந்துக் கல்விப் பாரம்பரியம்**

(1) இயற்கை சூழலோடியைந்த கல்விப் போதனையை முன்னிறுத்தியது.
(2) உலகியற் கல்வியை முதன்மைப்படுத்தியது.
(3) கல்வியின் முக்கிய இலட்சியமாகிய ஒழுக்கத்தை வலியுறுத்தியது.
(4) செவிவழிக் கல்வி மரபு சிறப்புற்றது.
(5) குருவின் இல்லம் நாடிச் சென்று மாணவன் குருகுலவாசஞ் செய்து கல்வி கற்றான்.

**47. இந்து மருத்துவப் பாரம்பரியம்**

(1) திருக்கோயிற் பண்பாட்டுடன் தொடர்புடையது.
(2) சரகரால் அறுவைச் சிகிச்சை நுட்பங்கள் அறிமுகம் செய்யப்பட்டன.
(3) தன்வந்திரியால் வகைப்படுத்தப்பட்டு வளமூட்டப்பட்டது.
(4) மருத்துவர்களுக்கு அரசர்களால் மானியங்கள் வழங்கப்பட்டன.
(5) அதர்வ வேதத்தில் பல்வகை மருந்துகள் பற்றிய கருத்துக்கள் உள்ளன.

**48. இந்து தத்துவ மரபில் பிரமசூத்திரம்**

(1) பிரஸ்தானத்திரயத்தில் அடங்கும் மூன்று நூல்களில் ஒன்று.
(2) உபநிடதங்களில் குரு சீடர்களிடையே நிகழ்ந்த உரையாடல்களின் தொகுப்பாகும்.
(3) பாதராயணரால் இயற்றப்பட்டது.
(4) ஆன்ம ஈடேற்றத்திற்கு வழிகாட்டுகின்றது.
(5) ஆறு அத்தியாயங்களை உடையது.



**49. சங்ககாலச் சமயநெறி**

(1) சங்ககாலம் தமிழரது சமயநெறியின் தொன்மைச் சிறப்பினைக் காட்டும் காலமாக அமைந்தது.
(2) சங்ககாலத்தில் ஐவகை நிலவாழ்வுக்கு அமையச் சமுதாய அமைப்பு நிலவியது.
(3) மக்கள் வாழ்வில் இசை, நடனம் கலந்த பண்பாடு காணப்பட்டது.
(4) சைவசமயம் சார்பான வழிபாடு காணப்பட்டமைக்குக் குறிப்புகள் உண்டு.
(5) இக்காலத்தில் வைணவ வழிபாடு இடம்பெற்றதாக குறிப்புகள் இல்லை என அறிஞர் கருதுவர்.

**50. புராதன இந்துச் சட்டம்**

(1) இந்துச் சட்டம் தர்மம், வியவகாரம், சாரித்திரம், ராஜசாசனம் ஆகிய நான்கையும் மூலங்களாகக் கொண்டது.
(2) பெண்களின் உரிமை தொடர்பில் கரிசனை கொண்டிருந்தது.
(3) சாதாரண மனிதனைக் காட்டிலும் அரசன் செய்த குற்றத்திற்குப் பன்மடங்கு தண்டத்தை விதித்தது.
(4) நீதிமன்றத்தில் அரசனே தலைமை நீதிபதியாக இருந்தான்.
(5) 'பரிஷத்' எனும் நீதிச்சபை ஏழு உறுப்பினர்களைக் கொண்டது.

* * *